உ

சிவமயம்

# புவனேசுவரி மகத்துவம்

தேவிபாகவதம் முதலிய நூல்களை
ஆதாரமாகக்கொண்டு

அச்சுவேலி

சிவஸ்ரீ ச. குமாரசுவாமிக்குருக்கள்
அவர்களால்

எழுதப்பட்டது.



கொக்குவில்
சோதிடப்பிரகாசயந்திரசாலையில்
அச்சிற்பதிப்பிக்கப்பெற்றது.

வெகுதாணியஸ்ரீ தைமீ.

1939. [விலை சதம் 25.

உ

# முன்னுரை



சூரியன் ஒளியுடையதென்று கண்ணுள்ளவர் யாவரும் அறிவர். அவர்களுக்கு அதைப் பிறர் சொல்லி அறிவிக்கவேண்டியதில்லை. அதற்காகப் புராணங்களிலிருந்தும் ஆகமங்களிலிருந்தும் பிரமாணம் காட்டவேண்டியதும் இல்லை. அதுபோல புவனேசுவரி சிவசத்தி என்பதை அறிந்தவர்களுக்கு புவனேஸ்வரியின் மகத்துவத்தைப் பிறர் சொல்லி அறிவிக்கவேண்டியதில்லை. நூற்பிரமாணங்களை எடுத்துக் காட்டவேண்டியதுமில்லை. சத்தி சிவத்தின் வேறானதன்று. ஆதலாற் சத்தியின் மகத்துவம் சிவத்தின் மகத்துவமேயாம். சிவத்தின் மகத்துவத்தைச் சிவசமயத்தவர் அறியாதிருப்பாரா?

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர் தேவாரம் பாடிய ஸ்தலமாகிய திருமாகறலில் எழுந்தருளிய உமாதேவியாருக்குப் புவனநாயகி என்று பெயர். ஈசுவரி என்பதும் நாயகி என்பதும் ஒரே பொருளுடையவை. புவனேசுவரி சிவசத்தி என்பதற்கு இதுவும் ஒரு சாட்சி.

புவனேசுவரியின் மகத்துவம் வாக்குக்கு எட்டாதது; மனத்துக்கும் எட்டாதது. ஆயினும் சைவநூல்களைக் கற்றலும், உபதேசித்தலும்

அவற்றின் சாரத்தை மற்றையோர் எளிதில் அறியுமாறு நூல்களை எழுதுதலும் தமது பொழுது போக்காகக்கொண்ட சைவசிவாசாரிய திலகமாகிய ஸ்ரீமத் குமாரசுவாமிக்குருக்களவர்கள் படைத்தல் காத்தல் அழித்தலாகிய முத்தொழிலையும் முறையே செய்யும் மகத்துவம் வாய்ந்த பிரமா, விஷ்ணு, உருத்திரன் ஆகிய இவர்களுக்குப் புவனேசுவரி செய்த பேரருளைக்கொண்டு அதன் மகத்துவத்தை ஒருவாறு உணர்த்துகின்றார்கள். உலகமாதாவாகிய புவனேசுவரியின் திருவருட்செயல்களைச் சொல்லலும் கேட்டலும் வாசித்தலும் மனதுக்கு இன்பத்தை விளைவிப்பனவேயன்றி நாம் ஈடேறுதற்கும் வழிகளாகும்.

இச் சிறு புஸ்தகத்தை யாவரும் வாசித்து ஈடேறுமாறு திருவருள் சித்திக்க.

இங்ஙனம்

கந்தவனம்,
வெகுதானியஹு
கார்த்திகைமீ.

சு. சிவபாதசுந்தரம்



உ

கணபதிதுணை

# புவனேசுவரி மகத்துவம்

சீரணி சிருக்கு மணிவடஞ் சங்கு
திகிரிசூ லப்படை யிலைவேல்
போரணி பாச மங்குசங் கழைவில்
பூங்கணை வேறுவே றணியா
ஆரணன் மாய னரனிப முகத்த
னனங்கனென் றிவர்தொழிற் கெல்லாம்
காரண மாத றெரித்தருள் கொழிக்குங்
கன்னியை யுன்னியேத் தெடுப்பாம்.

—தணிகைப்புராணம்.

அநாதிமலமுத்த சித்துருவாய், உருவம் குணம் குறி செயல் முதலியான இல்லாதவராய், ஒப்புயர்வின்றி ஆன்மாக்களின் இருதயகமலத்தில் இருப்பவர் சிவபெருமானே ஆவர். சிவபெருமான் சத்திகளுக்கெல்லாந் தலைவராதலிற் சத்திமான் எனப்படுவர். ஆன்மாக்களின் ஆணவமல சத்தியைக் கெடுத்து அத்துவித முத்திப்பேற்றைக் கொடுப்பதற்காகப் பரமசிவன் கொள்ளும் அருவம், அருவுருவம், உருவம் என்னும் மூவகை வடிவிற்கும் சிருட்டி, திதி, சங்காரம், திரோபவம், அனுக்கிரகம் என்னும் பஞ்சகிருத்தியத்துக்கும் காரண

மாயுள்ளது சத்தியேயாம். சத்தி என்பதற்கு வல்லமை என்பதே பொருளாம். சத்தியானது நீருக்குக் குளிர்ச்சியும், அக்கினிக்குச் சூடும் போலச் சிவபிரானேடு பிரிப்பின்றி நிற்பதாம். அக்கினி பொருளால் ஒன்ருயினும் வடிவாற் செம்மை என்றும், குணத்தாற் சூடு என்றும் பிரித்தெண்ணப்படுமாறு போல, பரம்பொருள் ஒன்றேயாயினும் எவற்றையுங் கடந்து நிற்கும் ஒளியாகிய வடிவால் சிவமெனவும், எவற்றினுங் கலந்து அவைகளைத் தன்பால் இழுக்கும் வலிமையாகிய குணத்தால் சத்தி எனவும் பிரித்துக் கூறப்படும். சத்தியும் சத்தனும் மரமும் வைரமும் போலக் குணகுணிபாவமாய் நிலைத்தலானும் இருவருக்கும் பேதமின்மை நன்கு தெளியப்படும்.

ஒன்ருகிப் பலவாகி விபுவாகிச்
சிவையாகுஞ் சத்தி யொன்றே
துன்றியது நீங்காத துரியாதி
தப்பொருளாஞ் சிவமு மொன்றே
மன்றவுயர் சத்திகளுஞ் சத்திமான்
களுமீசன் மருவு மாயை
யன்றளித்த வாஞ்சத்தி யனைத்துமுமை
சத்திமா னெல்லா மீசன்.

—கூர்மபுராணம்.

விரிந்திடு மொளியை நீங்கியே
மதியு ஞாயிறும் விளங்கிட மாட்டா
திருந்திய வொளியு மன்னவை
தம்மை நீங்கியே சேர்ந்திடா ததுபோல்

இருந்தநம் மிறையு மிறைவியு
　　மொன்று யுறைகுவ ரிறைவியா லிறைவன்
பொருந்திடப் போக முத்திநன்
　　குதவிப் பொற்புறு சத்திமா னுவான்.

—வாயுசங்கிதை.

வரும்வடி வெல்லாஞ் சத்தி
　　சத்திதான் மரமுங் காழ்ப்பு
மிருமையும் போல மன்னிச்
　　சிவத்தினோ டியைந்து நிற்கும்.

—சிவஞானசித்தியார்.

சூரியன் உலகத்திலுள்ள புறவிருளை நீக்கி, ஒளியை உண்டாக்குவது போல, சிவபெருமான் திருவருளால் ஆன்மாக்களது மயக்கத்தை நீக்கி, அனுக்கிரகம் செய்வர். சத்தியே உலகிற்குக் காரணம்; சத்தியின்றேல் யாவுமின்று; திருவருளே சிவபெருமானுக்குச் சத்தியாம்; அவ்வருட்குணமாகிய சத்தியின்றிச் சிவமில்லை; சிவத்தை விட்டுச் சத்தி நீங்குவதில்லை; சத்தியின் வடிவம் ஞானமேயாம். அதுவே பராசத்தி எனப்படும்.

அரசனது ஆஞ்ஞாசத்தியானது மந்திரி, பிரதானி, படைத்தலைவர், நியாயாதிபதி முதலாகக் கீழ்நின்ற சேவகன் இறுதியாகவுள்ள அங்கத்தார்மாட்டுப் பதிந்து காரிய வேறுபாட்டாற் பலவகைப்படல் போல, பராசத்தி ஒன்றே இச்சித்தல், அறிதல், செய்தல் என்னும் வேறுபாட்டால் இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி என மூவகையாகவும், பின்னரும் அவாந்தர வேறுபாட்டால்

ஆநந்தசத்தியாகவும் வியாபரிக்கும். கிரியாசத்தியானது ஆரிணி, செநநி, இரௌத்திரி, ஈசானி, பூரணி, ஆர்த்தி, வாமை, மூர்த்தி என எட்டாக வியாபரிக்கும். அவற்றுள் ஆரிணி, செநநி, இரௌத்திரி என்னும் முச்சத்திகளும் சிவபெருமானுக்குச் சூக்குமவடிவாகவும், ஏனைய ஐந்தும் தூலவடிவாகவும் சொல்லப்படும். அன்றியும், செநநியாற் படைப்பும், இரௌத்திரியாற் காத்தலும், மறைத்தலும், ஆரிணியால் அழித்தலும், அருளலும் ஆகிய சூக்கும கிருத்தியங்களும், ஈசானி முதலிய ஐந்தாலும் தூல கிருத்தியங்களும் செய்தருளுவர். இவ்வுண்மைகள்

"அவருடைய பராசத்தி பலதிறப்படுவது."

என உபநிடதமும்,

"சிவபிரானுக்குத் தீயின் சூடுபோல, சத்தியார் வேறுபடாதுள்ளார்; சத்தியின்றிச் சிவபிரான் இல்லை; சிவனையின்றிச் சத்தியில்லை." எனச் சிவாசமமும்,

"உமையலா துருவமில்லை"

எனத் தேவாரமும் கூறுமாற்றானும் பிறவாற்றானும் உணரப்படும்.

சத்தியாகிய உமாதேவியார் காமாட்சி என்னுந் திருநாமத்தோடு முப்பத்திரண்டு அறங்களையும் வளர்க்கின்றார். சிவகாமி அம்மையார் என்னுந் திருநாமத்தோடு பிறவிப்பிணியை நீக்கும் பொருட்டுச் சிவபெருமானது திருநிருத்தத்துக்குச் சாட்சியாய் நிற்கின்றார். விசாலாட்சி என்னும் நாமத்தோடு ஆன்மாக்களுடைய

இளைப்பை நீக்கியருளுகின்றார். மீனாட்சி என்னுந் திருநாமத்தோடு உலகத்தில் நீதிநெறிகளை நிலைபெறச் செய்தருளுகின்றார். புவனேசுவரி என்னுந் திருநாமத்தோடு மும்மூர்த்திகளும் முத்தொழில் செய்வதற்கு அதிகாரம் கொடுத்தருளுகின்றார்.

இனி, ஈசுரன் என்னுந் திருநாமம் காரணப்பெயராய் நின்று பிறரையும் உணர்த்துமேனும் காரண இடுகுறிப் பெயராய்ச் சிவபெருமான் ஒருவரையே உணர்த்தும். அதுபோல ஈசுவரி என்னும் பெயரும் உமையம்மையாரையே உணர்த்தும். ஆகவே, பரமேசுவரி, மகேசுவரி, ராஜேசுவரி, புவனேசுவரி முதலிய நாமங்களும் தேவியாருக்கே உரிய திருநாமங்களாம். புவனேசுவரி என்பது உலகங்கட்கெல்லாம் ஐசுவரியத்தைக் கொடுப்பவர் எனப் பொருள்படும்.

சிவசத்தியாகிய புவனேசுவரி அபயகரமும், வரத கரமும், பாசம் அங்குசம் தாங்கிய மற்றிரு கரங்களுமாக நான்கு திருக்கரங்களுடையவர்; மூன்று திருக்கண்களையுடையவர்; பூர்வஞானம் அபரஞானமாகிய இரு தனங்களையுடையவர்; பொன்னுபரணங்களையும், முத்தாபரணங்களையும் தரித்துள்ளவர்; பதினாறு அக்ஷரரூபமாகிய பதினாறிதழ்க்கமலத்தில் எழுந்தருளியிருப்பவர். உலகத் துன்பத்துக்குப் பயப்படவேண்டாமென்று அனுக்கிரகஞ் செய்யுங் குணத்தை அபயம் குறிக்கும். ஆன்மாக்களின் கன்மத்துக் கீடாகப் போகமுத்திகளைக் கொடுப்பவர் என்பதை வரதகரம் உணர்த்தும். பாசம் மலமாயாகன்மங்களை நீக்குபவர் என்பதை உணர்த்தும். அங்குசம் ஆணவமல சத்தியை அடக்குபவர் என்பதை உணர்த்தும்.

## புவனேசுவரி பிரமாவுக்குக் காட்சிகொடுத்தல்.

பூர்வகாலத்திலே ஒரு சலப்பிரளயம் உண்டாயது. பூமி முழுவதும் நீரினாலே மூடப்பட்டது. பிரமதேவர் பூமியின் எல்லையை அநேக ஆண்டுகளாகத் தேடியும் காணப்பெறாதவராயினர். ஆகாயத்திலே பிரமதேவர் கேட்கும்படி "நீ தவஞ் செய்யக்கடவாய்" என்று ஒரு அசரீரிவாக்கு எழுந்தது. பிரமா அசரீரி கூறிய பிரகாரம் பலவருட காலம் தவஞ்செய்தார். அவர் தவஞ் செய்துவருங் காலத்திலே "நீ சிருட்டி செய்யக்கடவாய்" என்று ஒரு வாக்கு உண்டாயது. பிரமா 'எதனைச் சிருட்டிப்பது; ஒன்றுந் தோன்றவில்லையே' என்று மயங்கினார். அப்பொழுது தேவவிரோதிகளான மதுகைடபர் என்கிற அசுரர்கள் இருவர் வந்து எதிர்த்தார்கள். பிரமா அசுரர்களால் வருந்தியவராய், விஷ்ணுமூர்த்தியை அணுகித் தோத்திரஞ்செய்தார். விஷ்ணு யோகநித்திரையினின்று மெழுந்து, போர்க்கோலந் தாங்கி, மதுகைடபர்களோடு யுத்தஞ்செய்து வாட்படையினாலே அவர்களைச் சங்காரஞ்செய்தார். உருத்திரர் அந்தப் பிரமவிட்டுணுக்களுக்கு நடுவே வந்து நின்றார்.

## புவனேசுவரி பிரமவிட்டுணுருத்திரருக்கு அருள்செய்தல்.

அப்பொழுது நின்மலையாகிய சத்தி தோன்றியருளினார். பிரமாவும், விஷ்ணுவும், உருத்திரனும் சத்தியைக் கண்டு எழுந்து நமஸ்கரித்து நின்றார்கள். சத்தி அவர்களை நோக்கி, "நீங்கள் உயிர்களின் கன்மத்திற் கேற்ப நால்வகைத் தோற்றமாகச் சிருட்டி, திதி, சங்காரம் என்னுங் கிருத்தியங்களை நடத்தி, உங்களுடைய பதவிகளில்

வீற்றிருப்பீர்களாக" என்று கிருபைசெய்தருளினர். திரிமூர்த்திகளும் தோத்திரஞ்செய்து நின்றுகொண்டு "அம்மையே! பூமியைக் காணவில்லை; எங்கும் ஜலம் நிறைந்திருக்கிறது; ஆகையால், யாங்கள் சிருட்டி முதலிய கிருத்தியங்களைச் செய்வதற்குச் சத்தியற்றிருக்கின்றோம்" என்று விண்ணப்பஞ்செய்தார்கள். அதனைத் திருச்செவி சாத்திய ஈசுவரி புன்னகைகொண்டருளினர். அச்சமயத்தில் அவருடைய கிருபையினல் ஓர் விமானம் ஆகாயமார்க்கமாக வந்தது. முதல்வி மும்மூர்த்திகளையும் நோக்கி, "நீங்கள் இவ் விமானத்தில் இவருவீர்களாக" என்றருளினர். அவர்கள் பிரணவ சொரூபமாய் விளங்கும் பகவதியைத் தியானித்து அவ் விமானத்தில் இவர்ந்தனர். தேவி தம்முடைய சத்தியினல் விமானத்தைச் செலுத்தியருளினர். அது ஓர் இடத்தை அடைந்தது. அங்கே பூமியையும், அதில் புஷ்பங்களோடு கூடிய விருட்சம், நதி முதலியவைகளையும், மனுஷர்களையும், அழகிய நகரத்தையும், ஓர் அரசனையும் பிரமா முதலிய மூர்த்திகள் கண்டு "சுவர்க்கம் போன்ற இந்நகரத்தை எங்ஙனம் காணப்பெற்றோம்; இது யாரால் படைக்கப்பட்டது?" என்று சந்தேகங் கொண்டார்கள். முன் காட்சிகொடுத்த தேவி ஆகாயத்திற் றோன்றியருளினர். அவர்கள் அம்பிகையைத் தரிசித்தற்கு முன் அவ்விமானம் மேலெழுந்து மற்றோர் இடத்தை அடைந்தது.

## புவனேசுவரி சுவர்க்கலோகம் காட்டியருளுதல்.

அவ்விடத்தில், பாரிசாதவிருட்ச நீழலில் காமதேனுவும், அதன் சமீபத்தில் ஐராவதயானையும், ஆடல்

பாடல் அபிநயங்களோடு கூடிய தேவரம்பைகளுடைய கூட்டமும், இந்திரனும், இந்திராணியும், தேவர்களும் இருக்கக் கண்டு அதிசயமுற்றார்கள். அப்பொழுது அவ் விடத்தினின்று மகாதீரனாகிய ஓர் அரசன் வெளிப்பட் டுப் பூமியில் நின்றான். அவர்கள் அவனை யாரென்று அறிவதற்குமுன் விமானம் மனோவேகத்தோடு வேறோர் இடம் சென்றது.

## புவனேசுவரி பிரமலோகம் காட்டியருளுதல்.

அவ்விடத்தில் பிரமலோகமும், அவ்வுலகத்தில் சபையொன்றும் அச்சபையில் தேவர்களால் வணங்கப் படுகின்ற பிரமாவும், அவரைச் சூழ்ந்து நான்கு வேதங்க ளும், ஆறு அங்கங்களும் பிறவும் தேவவடிவங்கொண்டி ருப்பதைக் கண்டு அதிசயமடைந்தார்கள். உருத்திர னும், விஷ்ணுவும் பிரமாவை நோக்கி, "நான்கு முகத் தோடு இருக்கிற இந்தப் பிரமா யார்?" என்று வினவி னார்கள். அவர் "சிருஷ்டிகர்த்தாவாகிய இவர் யாரோ நான் அறியேன்" என்று கூறினார். அப்பொழுது விமா னம் மற்றோரிடம் சென்றது.

## புவனேசுவரி உருத்திரலோகம் காட்டியருளுதல்.

அவ்விடத்தில் மங்களகரமும் அழகுமான உருத் திரலோகம் காணப்பட்டது. அதுசமயத்தில் உருத்தி ரர் வெளிவந்தனர். அவர்கள் மூவரும் அவரை நோக்கி ஆச்சரியமடைந்தார்கள். அதன் பின்னர் விமானம் மனோவேகத்தோடு வைகுண்டத்திற் போயது.

## புவனேசுவரி வைகுண்டம் காட்டியருளுதல்.

அங்கே விட்டுணுமூர்த்தி கருடவாகனத்தில் தோன்றினர். மும்மூர்த்திகள் ஒருவரை யொருவர் பார்த்து, இப்படியும் உண்டா? என்று எண்ணும் பொழுது விமானம் வாயுவேகமாகத் திருப்பாற்கடலை அடைந்தது.

## புவனேசுவரி பிரமா திருமால் உருத்திரருக்குக் காட்சிகொடுத்தல்.

திரிமூர்த்திகள் அந்தச் சமுத்திர மத்தியில் ஸ்ரீபுரம் என்னுந் தீவைக் கண்டார்கள். அத் தீவானது மந்தாரம், பாரிசாதம் முதலிய விருட்சங்களாற் சூழப்பட்டதும், அவ்விருட்சங்களில் மலர்ந்த புஷ்பவாசனை யையுடையதும், வண்டுகளது கீதமும் குயிலோசையும் நிறைந்ததுமாய் விளங்கிற்று. அச் சோலையின் மத்தியில் பரமாற்புதமும், மங்களரூபமும், இரத்தினங்களால் இழைக்கப்பட்டதும், இரத்தினமாலைகளால் அலங்கரிக்கப்பட்டதும், அநேகவிதமான சித்திரங்களையுடையதும், மேற்கட்டியையுடையதும், திரைச்சீலையோடு கூடியதும் ஆகிய ஓர் ஆசனம் இருந்தது.

அந்த ஆசனத்தின்மேல் செந்நிற வஸ்திரமும், சந்தனப் பூச்சும், சிவந்த நேத்திரங்களும், கோடிக்கணக்கான மின்னல் போன்ற திருமேனியும், தந்தவரிசைகளும், சிவந்த அதரங்களும், ஆநந்தமுடைய முகமும், கோடிக்கணக்கான இலக்குமிகளை உவமித்தற்கரிய மங்களமும், அநேக சூரியர்களை நிகர்த்த காந்தியும், அபயம், வரதம், பாசம், அங்குசம் என்பவைகளைத் தரித்த திருக்

கரங்களும், பிரகாசிக்கின்ற ஸ்தனங்களும், செந்நிறத் திருமேனியும், புதிய யௌவனப்பருவமும், புன்னகையும் உடையராயும், அங்கதம், கேயூரம், கிரீடம் முதலிய ஆபரணங்களால் விளங்குபவராயும், திரிபுவனசுந்தரி முதலிய திருநாமங்களை உச்சரிப்பதில் அன்புடையவர்களாகிய தேவகன்னிகைகள் முதலியோர்களாற் சூழப்பட்டவராயுமுள்ள புவனேசுவரி எண்கோண வடிவாய் விளங்கும் ஸ்ரீசக்கரத்தின்மேல் வீற்றிருந்தருளினர்:—

பிரமவிட்டுணுக்கள் தேவியைக் கண்களால் தரிசித்தும் பூரணஞானத்தைப் பெருமையால் தேவியென்று அறியாதவர்களாய் மயங்கினர்கள். அப்பொழுது அவர்களுள் விட்டுணுமூர்த்தி ஞானவிசேடத்தால் புவனேசுவரியைத் தரிசித்து அவரின் பெருமையைச் சொல்லத் தொடங்கினர்.

“எங்கும் நிறைந்தவரும், அற்பபுத்தியுடையவர்களால் அறிந்து அடையப்படாதவரும், நம்மால் அறியக்கூடாத அநுக்கிரக சாமர்த்தியத்தையுடையவரும், தம் இச்சைப்படி எல்லாம் இயற்றுபவரும், புண்ணியக்குறைவுடையவர்களால் ஆராதித்தற்கரியவரும், சகல பிரபஞ்சங்களிலும் வியாபித்திருப்பவரும், உலகநாயகியும், நித்தியமங்கலையும், வேதாகமங்களின் உற்பத்தித்தானமாயுள்ளவரும், விசாலமான நேத்திரங்களையுடையவரும், (விசாலாக்ஷி) எல்லாப் பொருள்களுக்கும் ஆதியானவரும் இந்தப் புவனேசுவரியே. பரமேசுரன் செய்தருளும் திருநிருத்தத்துக்குச் சாக்ஷியாயிருப்பவரும் இவரே. இத்தேவியின் திருமருங்குகளில் திவ்வியாபரணங்களால் அலங்கரிக்கப்பட்டவர்களாகிய ஆரிணி, ஜநநி, ரோதயித்திரி முதலிய பல சத்திகள் காணப்படு

கின்றார்கள். அவர்கள் ஈசுவரியின் அம்சங்களாகும். நாம் இத் தேவியினுடைய சொரூபதரிசனம் கிடைக்கப் பெற்றோமாகையால் பரிசுத்தர்களாயினோம். பூர்வத்தில் நீங்காத தவஞ் செய்திருந்தமையால், இச் சொரூபதரிசனம் நமக்குக் கிடைத்தது. புண்ணிய சமூகத்தையுடையவராயும் விரதாநுஷ்டானத்தில் மேம்பட்டவராயுமிருப்பவர்களும், ஒருமுறை பிரபஞ்ச ஆசையின் வசப்படுவார்களாயின் அவர்கள் இத் தேவியைத் தரிசிக்கப் பெறார்கள். எந்தப் பகவான் எல்லாப் புவனங்களையும் தேவகூட்டத்தார்களையும் சிருட்டிக்கின்றாரோ அந்தப் பரமேசுரருடைய திருரூபமாயுள்ளவர் இந்தப் பரமேசுவரியே. மகாமாயா சொரூபிணியாயும், எப் பொருட்குந் தலைவியாயும், எல்லா ஆன்மாக்களுக்கும் மங்களத்தை நினைப்பிக்கிறவராயும் இருப்பவர் இந்தப் பகவதியே. இவருடைய பெருமையை நம்மாற் சொல்ல முடியாது. நாம் இப் பரமேசுவரியின் இலட்சம் பாகத்தில் ஓர் பாகத்திற்கேனும் ஒப்பிடும் அளவினையுடையோமல்லோம். எனக்கு இத் தேவி தரிசன மாத்திரத்தால் இப்பொழுது பூரண ஞானமுண்டாயிற்று. இவர் நமக்கு மாதாவாகும். யாம் இத் தேவியைத் தோத்திரஞ் செய்வோமானால், மாயையின் முதல்வியாகிய இவர் நாம் விரும்பியவைகளைத் தந்தருளுவார்.'' என்று கூறினார். பின்பு மும்மூர்த்திகளும் ஒரே மனமுடையவர்களாயும், சந்தோஷசாகரத்தில் மூழ்கினவர்களாயும் நின்றார்கள். அப்பொழுது புனேசுவரி வெளிவந்து மூவரையும் அழகிய பெண்வடிவமாக்கினார். மூவரும் ஒருவரையொருவர் பார்த்து அதிசயித்துத் திருச்சந்நிதானத்திற்போய் நமஸ்கரித்து நின்றார்கள். மகேசுவரி கிருபா நோக்கம் செய்தருளினார்.

## விசுவரூப தரிசனம்.

பிரமா விஷ்ணு உருத்திரன் என்னும் திரிமூர்த்திகளும் தேவியாரது திருவடிகளைத் தாங்குகின்ற கோடி சூரியப்பிரகாசமுள்ள இரத்தின பாதுகையின் நோக்கமாகவே நின்றார்கள். தேவியாரது தோழிமார்கள் அவரது திருமருங்கில் தொண்டுகளைச செய்துகொண்டு ஆனந்தமேலிட்டவர்களாய் நின்றார்கள்.

புவனேசுவரியின் பாதுகையணிந்த திருவடிநகத்தில் அநேககோடி பிரமாண்டங்களும், அவைகளிலுள்ள சராசரங்களும், பிரமா விஷ்ணு உருத்திரன் என்னும் மூவர்களும், இந்திரன் முதலிய அஷ்டதிக்குப்பாலகர்களும், சூரியன் சந்திரன் முதலிய கிரகங்களும், மஹாமேரு முதலிய மலைகளும், சத்தசமுத்திரங்களும், கங்கை முதலிய தீர்த்தங்களும், தேவகந்தருவர்களும், அசுவினி தேவர்களும், தேவரம்பை முதலிய பெண்களும், தும்புருநாரதரும், வசுக்கள், சாத்தியர், சித்தர், பிதிர்தேவர், நாகர், கின்னரர், கிம்புருடர், அசுரர் முதலியவர்களும், அகஸ்தியர் முதலிய முனீந்திரர்களும், வைகுண்டம் பிரமலோகம் முதலிய உலகங்களும், சிருட்டியினுட்பட்ட ஏனையவைகளும் தோன்றி விளங்குவதைத் திரிமூர்த்திகளும் கண்டு தரிசித்தார்கள். மேலும், பிரமாவின் உற்பத்தித்தானமாகிய தாமரையும், பிரமாவும், விட்டுணுவும் இருக்கக் கண்டார்கள்.

பிரம விஷ்ணு ருத்திரர்கள் உலகமாதாவாகிய புவனேசுவரியே எல்லாவற்றிற்கும் ஆதாரமாயுள்ளார் என்னும் உண்மையை உணர்ந்து, அவரது திருவிரல் நகத்திற் றோன்றிய அற்புதங்கள் எல்லாவற்றையுந் தரிசித்

துக்கொண்டு, சித்தசுத்தியோடும் திடபத்தியோடும் அநேக வருஷம் வரையும் அமிர்தமயமானதும் சுகத்தைச் செய்வதுமாகிய அத் தீவிலே இருந்தார்கள்.

## விட்டுணுதேவர் புவனேசுவரியைத் தோத்திரஞ்செய்தல்

இப்படி யிருக்குங் காலத்தில் ஒருநாள் விஷ்ணு மூர்த்தியானவர் சகல புவனங்களுக்கும் இறைவியாய் இருக்கும் மஹாதேவியை நமஸ்கரித்துத் தோத்திரஞ் செய்வாராயினர். "தேவியே! நமஸ்காரம். மாயையின் முதல்வியே! நமஸ்காரம். சிருஷ்டி காரணியே! நமஸ்காரம். வேண்டுவார் வேண்டுவதைக் கொடுப்பவரே! நமஸ்காரம். அறிவை விருத்தி செய்பவரே! நமஸ்காரம். பிரபஞ்சம் என்னுஞ் சமுத்திரத்தைக் கடக்கச் செய்யும் தெப்பமாயுள்ளவரே! நமஸ்காரம். பஞ்சகிருத்தியங்களையும் நடத்துகிறவரே! நமஸ்காரம். எல்லாப் பொருள்களினும் கலந்திருக்கின்றவரே! நமஸ்காரம். அடியார்களுடைய இருதயகமலத்தில் பிரகாசித்துக்கொண்டிருப்பவரே! நமஸ்காரம். ஞானரூபிணியே! நமஸ்காரம். நமஸ்காரம். சகல புவனங்களும், எமது தோற்ற ஒடுக்கமும் தேவரீரிடத்தில் என்பதை இப்பொழுது கண்டோம். சிருட்டி காலத்தில் ஆன்மாக்கள் பொருட்டுப் பிரபஞ்சத்தைப் படைக்கின்றீர். உம்முடைய கிருபையினாலே எல்லா உலகங்களையும் சந்தோஷப்படுத்துகின்றீர். எல்லாவற்றையும் உம்முடைய ஒளியினாலே பிரகாசப்படுத்துகின்றீர். கற்ப முடிவிலும் நீர் அழியாமல் இருக்கின்றீர். அடைதற்கரிய பரமானந்தத்தை அடைந்தோம். சிந்திப்பதற்கரிய உமது சரித்திரத்தையும், உம்மாற் சிருட்டிக்கப்பட்ட புவன கோடிகளையும் சிற்றறி

வினையுடையோமாகிய யாம் அறிந்துகொள்வது எங்ஙனம்? இதுவரையில் நாங்களே பிரசித்திபெற்ற திரிமூர்த்திகளென்று நினைத்திருந்தோம். நாங்கள் பார்த்த புவனங்கடோறும் பிரசித்தர்களான மும்மூர்த்திகள் காணப்பட்டார்கள். உமது திவ்ய மகத்துவம் அறிதற்கரிது" என்று பிரார்த்தித்தவராய், பின்னரும் விண்ணப்பஞ்செய்கின்றார்.

"உம்முடைய திருவுருவம் எப்பொழுதும் எனது இருதயத்தில் நீங்காமல் இருத்தல்வேண்டும். உமது திருநாமம் எனது வாக்கில் நீங்காது உலாவிக்கொண்டிருத்தல்வேண்டும். ஸ்ரீபாதாரவிந்த தரிசனம் அடியேனது கண்களில் நீங்காதிருத்தல்வேண்டும். உம்முடைய திருவுள்ளத்தில் நமது அடிமையாகிய இவன் இருக்கின்றான் என்கின்ற எண்ணம் என்றும் இருத்தல்வேண்டும். உமது கடன் அடியேனைத் தாங்குவது. உமக்குப் பணி செய்து கிடப்பதே எளியேனது கடன். நீர் சர்வஞ்ஞத்துவம் முதலிய எண்குணங்களுக்கும் இருப்பிடமாயிருக்கின்றீர். அறிவிலியாகிய யான் உம்மிடத்தில் விண்ணப்பஞ்செய்துகொள்ளற்பாலதியாது?

பிரமா சிருட்டிக்கின்றார். விட்டுணு காக்கின்றார். உருத்திரர் அழிக்கின்றார் என்பது உலகப் பிரசித்தி. இதனுடைய உண்மை யாதென்றால்: அம்மூவரும் உம்முடைய இச்சையினால் உமது சக்தியுக்தர்களாய் முத்தொழில்களையுஞ் செய்கின்றார்களேயன்றித் தாமாகவே செய்யுஞ் சுதந்திரர் அல்லர். இப் பூமியைப் பூமிதேவி தாங்குகின்றாள் என்பர். அப்படியன்று; உம்முடைய ஆதாரசத்திதான் தாங்குகின்றது. சூரிய சந்திரரும் உம்முடைய ஒளியுடனே கூடினவர்களாய்ப் பிரகாசிக்கின்றார்கள்.

ஆகையினாலே சகல பிரபஞ்சமும் நீரே. நாங்கள் எப்பொழுது பிறப்புடையேமாயினேமோ அப்பொழுதே எங்களுக்கு நித்தியத்துவம் இல்லாமற்போயிற்று. வேறு யார் நித்தியராவர்? நீரே நித்தியையாயும் ஆதியாயும் சுத்தமாயையாயும் இருக்கின்றீர். நீர் ஞானிகளுக்கு ஞானியாயும், செல்வர்களுக்கு இலக்குமியாயும், மோட்சத்தை இச்சிப்பவர்களுக்கு மோட்சசொரூபியாயும், "சுவதா" முதலிய ஏழுகோடி மந்திரசொரூபிணியாயும் இருக்கிறீர். ஆன்மாக்களது இகபரசாதனத்தின் பொருட்டு வேதாகமங்கள் உம்மாலே விதிக்கப்பட்டன. உம்முடைய திருவடிகளை அடைக்கலமாக அடைகின்றேன். சிவஞானத்தைத் தந்தருளுக" என்று துதித்து, ஆனந்தபரவசராய் மௌனமுற்றிருந்தார்.

## புவனேசுவரியை உருத்திரன் துதித்தல்.

பின்பு உருத்திரர் தேவியை வணங்கிப் பலவாகிய தோத்திரங்களைச் செய்து, "என்னிடத்தில் கிருபை கூர்ந்து, நவாக்ஷரமந்திரத்தை உபதேசித்தருளுதல்வேண்டும்; நிர்மலமாகியும் உத்தமோத்தமமாகியும் உள்ள அம்மந்திரத்தைச் செபித்து நித்தியானந்தமுடையேனாவேன்; பிரணவரூபிணியாகிய நீர் என்னைக் கரையேற்றுவீராக" என்று பிரார்த்தித்தார். ஈசுவரி அவர் விரும்பியவாறே உபதேசித்தருளினார். உருத்திரர் பேரானந்தமடைந்து திருவடிகளை வணங்கி, அடியார்கள் விரும்பியதைக் கொடுப்பதாயும் மோக்ஷத்தைச் செலுத்துவதாயுமுள்ள அம்மந்திரத்தைச் செபித்து நிட்டைகூடினார்.

## பிரமா துதித்தல்.

பிரமா பின்பு புவனேசுவரியை வணங்கிக் கூறுகின்றார். "உலககர்த்தா யான் என்று அகந்தைகொண்டிருந்தேன். அக்குற்றத்தினால் அளவற்ற பிறவிகளை எடுத்தேன். உமது கிருபையை உணராது அஞ்ஞானத்தால் வந்த பெரிய துன்பமாகிய விலங்கினின்றும் விடுவித்து, நீங்காத பத்தியுடன் இருக்கும்வண்ணம் அநுக்கிரகித்தல்வேண்டும். பரமசிவத்துக்குச் சத்தியாயுள்ள உம்முடைய பெருமையை அறியும்பொழுது உமக்கு எவ்விடத்திலாவது சனனமுண்டென்று காணப்படவில்லை; கேட்கப்படவுமில்லை. இவைகளையெல்லாம் சிற்றறிவினர் எங்ஙனம் அறிவர்?" என்று விண்ணப்பஞ்செய்து நின்றார்.

## புவனேசுவரி பிரமதேவருக்கு அதிகாரம் கொடுத்தல்.

புவனேசுவரி பிரமாவை நோக்கி, "வெண்டாமரையை ஆசனமாகக் கொண்ட இந்தச் சரஸ்வதியை உனக்குச் சத்தியாகத் தந்தோம்; இச் சத்தி உன்னை விட்டுப் பிரியமாட்டாள்; என்னுடைய அமிசமாயுள்ள இவளுடன் நீ சத்திய உலகம் சென்று ஆன்மாக்களின் கன்மத்திற் கேற்றவாறு சிருட்டிப்பாயாக" என்று அதிகாரம் கொடுத்தருளினார்.

## விட்டுணுமூர்த்திக்கு அதிகாரம் கொடுத்தல்

பின்னர் விட்டுணுவை நோக்கி, "மாதவனே! நீ இந்த மஹாலக்குமியை உனக்குச் சத்தியாகக் கொள்

ளூதி; என்னுற் றரப்பட்ட சர்வசம்பத்தையும் கொடுக்கிற இச் சத்தி உன்னுடைய மார்பில் எப்பொழுதும் வீற்றிருப்பாள்; இச் சத்தியுடன் நீ வைகுண்டம் சென்று காத்தற்றொழிலைச் செய்து வாழ்ந்திருப்பாயாக" என்று அநுக்கிரகம் செய்தருளினுர்.

## உருத்திரமூர்த்திக்கு அதிகாரம் கொடுத்தல்.

பின் உருத்திரமூர்த்தியை நோக்கி, "கௌரியைச் சத்தியாக வரித்துக்கொண்டு சம்மாரகிருத்தியஞ் செய்து கொண்டு இருப்பீராக" என்று அனுக்கிரகஞ்செய்து தத்துவோத்பத்தியையும் சிவதத்துவ சத்திதத்துவ உண்மைகளையும் உபதேசித்தார்.

## மும்மூர்த்திகளுக்கும் அநுக்கிரகித்தல்.

பரமேசுவரியார் பின்னர் மும்மூர்த்திகளையும் நோக்கி, "நீங்கள் முத்தொழிற்கும் கர்த்தாக்களாகையிஞலே அவ்வத் தொழில்களுக்குரிய குணங்களையே பிரதானமாகக் கொண்டு வாழுங்கள்; இனி நீங்கள் உங்கள் உங்கள் பதவிகளை அடையுங்கள்; உங்களுக்கு இடையூறு வருங் காலத்தில் எம்மைத் தியானியுங்கள்; நானும் பரமசிவமுமே தியானிக்கத்தக்கவர்கள்; உமாமகேசுரர்களாகிய எங்களைத் தியானித்தால் சர்வ காரியமும் சித்தியாகும்" என்று அநுக்கிரகம் செய்து மறைந்தருளினுர்.

மும்மூர்த்திகளும் தங்கள் தங்களுக்குரிய சத்திகளோடும் திருச்சந்நிதானத்தை விட்டு வெளியே வந்து, ஸ்திரீரூபத்தினின்றும் நீங்கி, தமது பழைய வடிவங்களைப் பெற்று, தத்தம் பதவிகளை அடைந்து, புவனேசுவரி

யின் சொரூபத்தைத் தியானித்து முத்தொழிலையுஞ் செய்துகொண்டிருந்தார்கள்.

## சத்திப் பிரதிட்டை.

பிரதிட்டையாவது மனம்வாக்குக்கெட்டாத கடவுளை அவைகட்செட்டினவராகச் சிந்தித்துத் துதித்து வழிபடும்படி மந்திரமயசரீரியாய்த் திவ்விய லிங்கத்தில் நிலைபெறச் செய்யுங் கிரியையாம். இனி, சத்தித்தாபனம் மூவகைப்படும் எனச் சிவாகமம் செப்பும். அவை யோகசத்தித்தாபனம், போகசத்தித்தாபனம், அதிகார சத்தித்தாபனம் என்பன. ஆன்மாக்களின் பாசத்தை நீக்குவதற்காக இலிங்க(நாததத்துவ)த்திலே ஓர் அசைவு எப்பொழுதும் உண்டு. அதுவே சத்தியாகும். அச் சத்தி இலிங்கத்தின் கீழடங்கி ஆவுடையாள் (விந்து) என்னும் பெயருடன் இருக்கின்றது; சிவப் பிரதிட்டையில் இலிங்கத்தின் கீழ் யோகசத்தியாகிய ஆவுடையாளைத் தாபிப்பது யோகசத்தித்தாபனமாம். மகேசுரர் முதலிய பேரங்களுக்கு இடப்பாகத்தில் இரண்டு புயத்தோடு கூடிய சத்தியைத் தாபிப்பது போகசத்தித்தாபனமாம். நான்கு திருக்கரத்தோடு கூடியதாய், சுவதந்திரமாய், மூலபேரமாய்த் தாபிப்பது வீரசத்தித்தாபனமாம்.

திருக்கோயில் கட்டி உலகமாதாவாகிய ஈசுவரியைப் பிரதிட்டை செய்விப்பவரும், நித்தியமாகிய பூசையையும், நைமித்தியமாகிய விழாக்களையும் நடத்துவிப்பவரும் தீவினைகள் நீங்கி சற்புத்திரப்பேறு முதலான ஐசுவரியங்களையும் சிவபத்தியையும் பெற்றுச் சிவானந்தாநுபவமுறுவர் என்பது திண்ணம். திண்ணம். திண்ணம்.

# திருமந்திரம்.

## புவனாதிபதி சக்கரம்.

பூசிக்கும் போது புவனா பதிதன்னை
யாசற் றகத்தினி லாவா கனம்பண்ணிப்
பேசிப் பிராணப் பிரதிட்டை யதுசெய்து
தேசுற் றிடவே தியான மதுசெய்யே.

செய்ய திருமேனி செம்பட் டுடைதானுங்
கையிற் படையங் குசபாசத் தோடபய
மெய்யி லணிகல மிரத்தின மாமேனி
துய்ய முடியு மவயவத் திற் றோற்றமே.

திரிபுரை சுந்தரி யந்தரி சிந்துரப்
பரிபுரை நாரணி யாம்பால வன்னத்தி
இருள்புரை யீசி மனோன்மணி யென்ன
வருபல வாய்நிற்கு மாமாது தானே.

குண்டலக் காதி கொலைவிற் புருவத்தள்
கொண்ட வரத்தினின் மன்னுகோ லத்தள்
கண்டிகை யாரங் கதிர்முடி மாமதிச்
சண்டிகை நாற்றிசை தாங்கிநின் றாளே.

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

# புவனேசுவரியம்மை திருவூஞ்சல்.

[நவாலியூர்

திரு. க. சோமசுந்தரப்புலவர் அவர்கள் பாடியது.]

## காப்பு.

அங்கமல மலர்மடவா ரிருவ ரோடும்
ஆன்றவரு மமரச்சு வேலி நீடுந்
திங்கடவழ் பொழிலிடைக்கா டொருபான் னாளுந்
திருவளரு நல்லிகப்பன் வயலில் வாழும்
பொங்குபரை யாதியைந்தா யுலக மீன்ற
புவனநா யகிபுகழ்சே ரூஞ்சல் பாடத்
துங்கமத வைந்துகரத் தொந்தித் தந்தித்
தும்பிமுக னம்பதுமத் துணைகாப் பாமே.

## நூல்.

மங்கலஞ்சேர் மறைநான்குந் தூண்க ளாக
மந்திரஞ்சே ராகமங்கள் விட்ட மாக
தங்குபல ஞானகலை வடங்க ளாக
தாரகமா மறைமூலம் பீட மாக
எங்குமருள் பொங்குமணி யூஞ்சன் மீதே
ஏகநா யகனுடனே யினிது மேவி
அங்கணணி நல்லிகப்பன் வயலில் வாழும்
ஆதிபுவ னேஸ்வரியே யாடி ரூஞ்சல். க

வானமருங் கங்கையினீர் பனிநீர் கூட்டி
வரமமரும் மந்திரப்பொற் கலநீ ராட்டி
கானமர்கற் பகக்கனகக் கலன்கள் மாட்டி
கவினமர்பூம் பட்டுடுத்திக் கழுநீர் சூட்டி
ஞானமணி விளக்கெடுத்துத் தூபங் காட்டி
நான்மறையந் தணர்பரவ நவைக ளோட்டி
ஆனமரு நல்லிகப்பன் வயலில் வாழும்
ஆதிபுவ னேஸ்வரியே யாடி ரூஞ்சல். உ

திங்களணி வெண்குடையிந் திராணி தாங்கத்
திலோத்தமையு முருப்பசியுங் கவரி வாங்கத்
துங்கமிகு மாலவட்ட மரம்பை வீசத்
தூயமுனி பன்னியர்க ளாசி பேச
செங்கமலை வெண்கமலை வடந்தொட் டாட்ட
செயமடந்தை யிடைவிலக்கிச் செங்கோல்நீட்ட
அங்கணணி நல்லிகப்பன் வயலில் வாழும்
ஆதிபுவ னேஸ்வரியே யாடி ரூஞ்சல். ௩

மங்கலதூ ரியமியம்பச் சங்க மேங்க
வானகதுந் துபிமுழங்க மறைக ளோங்க
செங்கைமணி யாழ்தடவி முனிவர் பாட
சேயரிக்க ணரம்பையர்கள் நடன் மாட
எங்குமர கரவோசை பொலிந்து நீட
இருவினையும் பழமலமு மிரிந்தே யோட
அங்கமலி நல்லிகப்பன் வயலில் வாழும்
ஆதிபுவ னேஸ்வரியே யாடி ரூஞ்சல். ச

காரணியு மணிக்கண்டத் தெண்டோண் முக்கட்
கங்கையணி சங்கரற்குக் காத னல்கும்
ஏரணியு மிருவிழியும் இருளை யோட்டும்
எழிலணியு மிளநகையும் ஞானத் திங்கட்
சீரணியுந் திருமுகமும் வேய்த்தோ ளுன்குந்
திருவடியுஞ் செஞ்சிலம்புந் தெரியக் காட்டி
ஆரணியு நல்லிகப்பன் வயலில் வாழும்
ஆதிபுவ னேஸ்வரியே யாட ரூஞ்சல். ரு

உன்னரிய பேரொளியே யமுதே தேனே
ஓங்காரத் துட்பொருளே யுமையே யென்றும்
முன்னரிய நாற்பத்து முக்கோ ணத்து
மூளைத்தெழுந்த சிவக்கொழுந்தே முதலே யென்றும்
கன்னிகைபா யுலகருள்கற் பகமே யென்றும்
கைதொழுது மெய்யடியார் கசிந்து போற்ற
அன்னமலி நல்லிகப்பன் வயலில் வாழும்
ஆதிபுவ னேஸ்வரியே யாட ரூஞ்சல். சா

தெண்டிரைநீர்த் தொண்டைமா னுற்றின் பாங்கர்
திருமுருகன் சந்நிதியி னொருபா லாகி
வண்டிசைக்கக் குயில்பாட மயில்க ளாட
மரகதப்பைங் கிளிபுகழும் வளமார் சோலை
தொண்டரினம் மண்டியுண்டு கண்ட நீங்கும்
துரியசிவ பரஞ்ஞானச் சுகவாழ் வீயும்
அண்டர்பணி நல்லிகப்பன் வயலில் வாழும்
ஆதிபுவ னேஸ்வரியே யாட ரூஞ்சல். எ

பாதிமதி நதிபொதியும் பரம னோர்பால்
பரதவர விகடநடப் பால னோர்பால்
சோதிவடி வேலுடைய தோன்ற லோர்பால்
சூரவயி ரவனோர்பால் வீர னோர்பால்
மோதுதிரை துயில்முகுந்தன் பிரம னோர்பால்
முத்தமிழற் புதமறைதேர் முனிவ ரோர்பால்
ஆதுரந்தீர் நல்லிகப்பன் வயலில் வாழும்
ஆதிபுவ னேஸ்வரியே யாட ரூஞ்சல். அ

மோனபர ஞானமதி முடியு மாட
முகமதியி னழகாட முறுவ லாடக்
கானமரைங் கணையினொடு கரும்பு மாடக்
கட்கடையி னூறுபரங் கருணை யாடக்
தேனமருங் குவளைநறுந் தெரிய லாடச்
செஞ்சிலம்பு கொஞ்சுதிரு வடியு மாட
ஆனமரு நல்லிகப்பன் வயலில் வாழும்
ஆதிபுவ னேஸ்வரியே யாட ரூஞ்சல். கூ

பூவமர்பொன் னாரணியே யாட ரூஞ்சல்
புனையருட்பொன் னாரணியே யாட ரூஞ்சல்
நாவமர்நல் லாரணியே யாட ரூஞ்சல்
நயமமர்நல் லாரணியே யாட ரூஞ்சல்
சேவமரு மந்தரியே யாட ரூஞ்சல்
தீயவினை வந்தரியே யாட ரூஞ்சல்
ஆவமரு நல்லிகப்பன் வயலில் வாழும்
ஆதிபுவ னேஸ்வரியே யாட ரூஞ்சல். கO

பூவாழி பொன்னின்மழை பொலிந்து வாழி
பூசுரரு மைந்தெழுத்தும் பொலிந்து வாழி
தேவாழி தேவர்கடம் பெருமான் வாழி
தெய்வமறை யாகமந்தீந் தமிழும் வாழி
தூவாழுந் தும்பிமுகத் தெம்பி வாழி
சுடரிலைவேற் பரன்வாழி தொண்டர் வாழி
ஆவாழி நல்லிகப்பன் வயலில் வாழும்
ஆதிபுவ னேஸ்வரியும் வாழி வாழி. கக

முற்றும்.

---

## தனியன்.

வெண்ணிலவார் திருமுடியும் விழிகள் மூன்றும்
விளங்கிழைசேர் கனதனமும் விறலா னேறும்
உண்ணிலரு மருட்பெருக்கு மிள்மை நீங்கா
ஒளியுருவு முயர்மணிப்பொன் னுடையு மோங்கும்
எண்ணிலவு மங்குசபா சத்தி னோடே
எழில்வரத மபயமுமா யிமைந்த கையும்
பண்ணிலவு பழமறைச்செஞ் சிலம்பு கொஞ்சும்
பாததா மரையுமுள்ளம் பதித்து வாழ்வாம்.

## எச்சரீக்கை.

கருவாருயிர் பெருவீடுற நடமாடரனொருபால்
வருவாய்நல் லிகப்பன்வயல் வாழ்வே எச்சரீக்கை. க

ஒன்றாகியொ ரைந்தாய்ப்பினு மொன்பான்வடி வாகி
நின்றாய்நல் லிகப்பன்வயல் நிறைவே எச்சரீக்கை. உ

ஐந்தாயெழுத் தெட்டாய்ப்பின்னு மாறாயிரு கூறாய்
வந்தாய்நல் லிகப்பன்வயல் மணியே எச்சரீக்கை. ௩

## பராக்கு.

திருவுமருள் மருவுகலை மகளுமடி பரவ
அருவுமரு வுருவுமரு வம்மே பராக்கு. க

ஒருகுடிலை சலனமுற இருவிழியி னோக்கி
உலகுதரு சலசபத வுடையே பராக்கு. உ

கரடதட விகடமத கரியினொரு நெடுவேல்
கரமணியு முருகையருள் கனியே பராக்கு. ௩

## லாலி.

தேவி லாலி சிவகாமி லாலி யரன்
ஆவி லாலி மகமாயி லாலி க

ஆதி லாலி யருணீதி லாலி சிவன்
பாதி லாலி பரஞ்சோதி லாலி உ

மாலி லாலி திரிசூலி லாலி யருள்
பாலி லாலி யெழில் நீலி லாலி. ௩

## மங்களம்.

ஆதிபுவனேஸ்வரிக்கு மங்களம்—முது
ஆரணங்கள் தோத்திரஞ்செய் யம்பிகைக்கு மங்களம்
பாதியுரு வானவட்கு மங்களம்—நிறை
பத்தர்கட்கு முத்திதரும் பார்ப்பதிக்கு மங்களம்
சோதியுரு வானவட்கு மங்களம்—துதி
சொல்லவருள் செய்புமொரு நல்லவட்கு மங்களம்
நீதியுரு வாமனைக்கு மங்களம்—புகழ்
நிலவுமிடைக் காட்டுவதி யுலகனைக்கு மங்களம்.

முற்றும்



இப்புஸ்தக விற்பனையால்
கிடைக்கும் பணம் மேற்படி கோயில்
திருநந்தனவனமும் கூபமும் அமைக்கும்
தொண்டிற்கு உபயோகிக்கப்படும்.